உ

# ஸ்ரீ முருக நிலையம்

# அடியார் திருக்கூட்டம்

வண்ணையம்பதி, (1958) சென்னை-21



13, 14 & 15-8-60ல்

திருவலம், வள்ளிமலை, மஹாதேவமலை,
பள்ளிக்கொண்டா, விரிஞ்சிபுரம்

ஆகிய

தலவழிபாட்டின்போது வெளியிடப்பட்டது.

உ

செந்திலாண்டவன் திருவடித்துணை.

# முகவுரை.



அன்புமிக்கச் சிவநேசச் செல்வர்களுக்கு.

15—8—'60ல் திருவருணையில் அருணைமுனிவரின் 6வது ஆண்டுவிழாவில் ஸ்ரீ முருகநிலையம் அடியார் திருக்கூட்டம் கலந்துகொள்ள இவ்வருடம் விசேஷ ஐந்து ஸ்தலங்களில் வழிபாடு செய்துகொண்டும் திருவருணையில் விழாவில் கலந்துகொண்டும் திருத்தொண்டுகள் பல செய்வதாகவும் தீர்மானித்துள்ளது. வழிபாட்டிற்குறிய சில பாக்களை இப்புத்தகத்தின் மூலம் வெளியிட்டிருக்கின்றோம். இவற்றை யாவரும் பாடி பரமனின் அருளைப் பெறுவீர்களாக.

இப்படிக்கு,

ஸ்ரீ முருக நிலையம் அடியார் திருக்கூட்டம்.

## (1) திருவல்லம் (திருவலம்).

### தேவாரம்—ஞானசம்பந்தர் பாடல்.

[பண்—வியாழக்குறிஞ்சி]

எரித்தவன் முப்புரம் எரியின் மூழ்கத்
தரித்தவன் கங்கையைத் தாழ்சடைமேல்
விரித்தவன் வேதங்கள் வேறு வேறு
தெரித்தவன் உறைவிடந் திருவல் லமே.

கற்றவர் திருவல்லங் கண்டு சென்று
நற்றமிழ் ஞானசம் பந்தன் சொன்ன
குற்றமில் செந்தமிழ் கூற வல்லார்
பற்றுவர் ஈசன்பொற் பாதங்களே.

—*—

## திருப்புகழ்.

அல்லயல டர்ந்த வில்லடல னங்கள்
அல்லிமல ரம்பு தனையேவ-
அள்ளியெறி கின்ற பிள்ளைமதி தென்ற
லையமுது றுகின்ற அணையூடே;
சொல்லுமர விந்த வல்லிதனை கண்டு
தொல்லைவினை வந்து முனியாதே-
துய்யவரி வண்டு செய்யமது உண்டு
துள்ளியக டம்பு தரவேணும்;
கல்லசல மங்கை எல்லையில்வி ரிந்த
கல்விகரை கண்ட புலவோனே-
கள்ளொழுகு கொன்றை வள்ளல்தொழ அன்று
கல்லலற ஒன்றை அருள்வோனே;
வல்லரசு ரஞ்ச நல்லசுரர் விஞ்ச
வல்லைநகர் வந்த மயில்வீரா-
வள்ளிபடர் கின்ற வள்ளிமலை சென்று
வள்ளியை மணந்த பெருமாளே.

—•—

## வள்ளிமலை திருப்புகழ்.

அல்லிவிழி யாலு முல்லைநகை யாலும்
அல்லல்பட ஆசைக் கடலீயும்-
அள்ளவினி தாகி நள்ளிரவு போலும்
உள்ளவினை யாரத் தனமாரும்;
இல்லுமிளை யோரு மெல்லஅய லாக
வல்லெருமை மாயச் சமனுரும்-
எள்ளியென தாவி கொள்ளைகொளு நாளில்
உய்யவொரு நீபொற் கழல்தாராய்;
தொல்லைமறை தேடி இல்லையெனு நாதர்
சொல்லுமுப தேசக் குருநாதா-
துள்ளிவிளை யாடு புள்ளியுழை மேவு
வெள்ளிவன மீதுற் றுறைவோனே;
வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ
வல்லைவடி வேலைத் தொடுவோனே-
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளி மண வாளப் பெருமாளே.

—•—

குடிவாழ்க்கை அன்னை மனையாட்டி பிள்ளை
குயில்போற்பர சன்ன மொழியார்கள்-
குலம்வாய்த்த நல்ல தனம்வாய்த்த தென்ன
குருவார்த்தை தன்னை உணராதே;
இடைநாட்கள் வெய்ய நமனீட்டி தொய்ய
இடர்கூட்ட இன்னல் கொடுபோகி-
இடுகாட்டி லென்னை எரியூட்டு முன்னு
னிருதாட்கள் தம்மை உணர்வேனோ;
வடநாட்டில் வெள்ளி மலைகாத்து புள்ளி
மயிலூக்க வல்ல குமரேசா-
வடிவாட்டி வள்ளி அடிபோற்றி வள்ளி
மலைகாத்த நல்ல மணவாளா;
அடிநாட்கள் செய்த பிழைநீக்கி என்னை
அருள்போற்றும் வண்மை தருவாழ்வே-
அடிபோற்றி அல்லி முடிசூட்ட வல்ல
அடியார்க்கு நல்ல பெருமாளே.

—✻—

## மஹாதேவமலை—திருத்தாண்டகம்.

தேவார்ந்த தேவனைத் தேவ ரெல்லாந்
திருவடிமேல் அலரிட்டுத் தேடிநின்று
நாவார்ந்த மறைபாடி நட்டம் ஆடி
நான்முகனும் இந்திரனும் மாலும் போற்றக்
காவார்ந்த பொழிற் சோலைக் கானம் பேராய்
கழுக்குன்றத் துச்சியாய் கடவுளே நின்
பூவார்ந்த பொன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

## தேவாரம்.

வேத நாயகன் வேதியர் நாயகன்
மாதின் நாயகன் மாதவர் நாயகன்
ஆதி நாயக ஞதிரை நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே.

செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் சேறுமோ
அத்த னென்றரி யோடு பிரமனும்
துத்தி யஞ்செய நின்றநற் சோதியே.

நூறு கோடி பிரமர்கள் நொந்தினுர்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவன் ஈச னொருவனே.

## பள்ளிகொண்டா—அரங்கநாதர்.

பச்சைமா மலைபோல்மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமரர்ஏறே ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிரயான்போய் இந்திரலோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே.

வேதநூல் பிராயம் நூறு மனிதர்தாம் புகுவரேனும்
பாதியும் உறங்கிப் போகும் நின்றதில் பதினையாண்டு
பேதை பாலகன் அதாகும் பிணி பசி மூப்பு துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே.

## நாமாவளி.

" ரங்கேசமாம் பாஹி ரங்கேச மாம்பாஹி
ரங்கேசமாம் பாஹி ரங்க ப்ரபோ."

—*—

## விரிஞ்சிபுரம்—திருப்புகழ்

நிகரில்பஞ்ச பூதமு நினையுநெஞ்சு மாவியு
நெகிழவந்து நேர்படு மவிரோதம்-
நிகழ்தரும்ப்ர பாகர நிரவயம்ப ராபர
நிருபவங்கு மாரவெ ளெனவேதம்
சகரசங்க சாகர மெனமுழங்கு வாதிகள்
சமயபஞ்ச பாதகர் அறியாத-
தனிமைகண்ட தானகிண் கிணியதண்டை சூழ்வன
சரணபுண்ட ரீகம தருள்வாயே;
மகரவிம்ப சீகர முகரவங்க வாரிதி
மறுகிவெந்து வாய்விட நெடுவான-
வழிதிறந்து சேனையு மெதிர்மலைந்த சூரனு
மடியவிந்தி ராதிபர் குடியேறச்;
சிகரதுங்க மால்வரை தகரவென்றி வேல்விடு
சிறுவசந்த்ர சேகரர் பெருவாழ்வே-
திசைதொறும்ப்ர பூபதி திசைமுகன்ப ராவிய
திரு விரிஞ்சை மேவிய பெருமாளே.

மருவுமஞ்சு பூத முரிமைவந்தி டாது
மலமிதென்று போட அறியாது-
மயல்கொளிந்த வாழ்வு அமையுமெந்த நாளும்
வகையில்வந்தி ராத அடியேனும்;
உருகியன்பி னேடு உனைநினைந்து நாளும்
உலகமென்று பேச அறியாத-
உருவமொன்றி லாத பருவம்வந்து சேர
உபயதுங்க பாத மருள்வாயே;
அரிவிரிஞ்சர் தேட அரியதம்பி ரானும்
அடிபணிந்து பேசி மறைமூலம்-
அருளுகென்ற போது பொருளிதென்று காண
அருளுமைந்த ஆதி குருநாதா;
திரியுமும்பர் நீடு கிரிபிளந்து சூரர்
செருவடங்க வேலை விடுவோனே.
செயலமைந்த வேத தொனிமுழங்கு வீதி
திருவிரிஞ்சை மேவு பெருமாளே.

—*—

## திருவண்ணுமலை (தேவாரம்)

உண்ணுமுலை உமையாளொடும் உடனுகிய வொருவன்
பெண்ணுகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணூர்ந்தன அருவித்திரள் மழலைம்முழ அதிரும்
அண்ணுமலை தொழுவார்வினை வழுவாவண்ணம் அறுமே

வெம்புந்திய கதிரோன்ஒளி விலகும்விரி சாரல்
அம்புந்திமூ வெயிலெய்தவன் அண்ணுமலை யதனைக்
கொம்புந்துவ குயிலாலுவ குளிர்காழியுள் ஞான
சம்பந்தன் தமிழ்வல்லவர் அடிபேணுதல் தவமே.

—*—

## திருப்புகழ்

இரவுபகற் பலகாலும் இயலிசைமுத் தமிழ்கூறித்-
திரமதனைத் தெளிவாகத் திருவருளைத் தருவாயே;
பரகருணைப் பெருவாழ்வே பரசிவதத் துவஞான-
அரனருள்சற் புதல்வோனே அருணகிரிப் பெருமாளே.

இருவர் மயலோ அமளி விதமோ
எ(ன்)ன செயலோ அணுகாத-
இருடி அயன்மா லமர ரடியா
ரிரையு மொலிதான் அவைகேளா;
தொருவ னடியே னலறு மொழிதா
னொருவர் பரிவாய் மொழிவாரோ-
உனது பததூள் புவன கிரிதா
னுனது கிருபா கரமேதோ;
பரமகுருவா யணுவி லசைவாய்
பவன முதலா கியபூதப்-
படையு முடையாய் சகள வடிவாய்
பழைய வடிவா கியவேலா:
அரியு மயனோ டபய மெனவே
அயிலை அலைமேல் விடுவோனே-
அடிமை கொடுநோய் பொடிகள் படவே
அருணகிரிவாழ் பெருமாளே.

—*—



## மங்களம்

அலகில்தமி ழாலுயர்ச மர்த்தனே போற்றி
அருணைநகர் கோபுரவி ருப்பனே போற்றி
அடல்மயில் நடாவு பிரபுத்வனே போற்றி
அவதான-
அறுமுகசு வாமியெனு மத்தனே போற்றி
அகிலதல மோடிவரு நிர்த்தனே போற்றி
அருணகிரி நாதனெனு மப்பனே போற்றி
அசுரேசர்;
பெலமடிய வேல்விடுக ரத்தனே போற்றி
கரதலக பாலிதரு புத்ரனே போற்றி
பெரியகுற மாதணைபு யத்தனே போற்றி
பெருவாழ்வும்-
பிரமனறி யாவிரத தக்ஷிண மூர்த்தி
பரசமய கோளரித வத்தினால் வாய்த்த
பெரியமட மேவியசு கத்தனே யோக்யர்
பெருமானே.

" தலையறிவி லேனைநெறி நிற்கநீ தீக்ஷை தரவேணும் "

—*—

ரத்தினம் (கிளை) அச்சகம் சென்னை-1.